35
ஏப்ரல்—1975
50 காசு

# கசடதபற

லினோ: தட்சிணாமூர்த்தி



# அக்கம் பக்கம்

இந்தியாவில் தமிழில்தான் முதன் முதலாகப் புத்தகம் அச்சேறியது. நான்கு லட்சத்திற்கும் மேலாக விற்பனை யாகும் வாரப் பத்திரிகையும் தமிழில்மட்டுமே இருக்கிறது. இவையெல்லாம் ஒரு விதத்தில் முக்கியமானவை.

அச்சுத் தொழில் வந்ததும் படிப்பும், எழுத்தும், பிரசுரமும் தீவிரமாகச் செயல்பட ஆரம்பித்தன. சுவடிகளில் இருந்தவையெல்லாம் அச்சேறியது; சுயமாகவும் சிலர் எழுதி அச்சேற்றினார்கள். ஆனால் சிறிது காலத்திற்குள்ளேயே எழுதுவதும், பிரசுரிப்பதும் பணம் பண்ணும் ஒரு காரியமாகி விட்டது.

சுமார் நாற்பது ஆண்டுகளாக ஆங்கிலத்திலும், தமிழிலும் எழுதியும் விமர்சனம் செய்தும் வரும் திரு. க. நா. சுப்ரமண் யம் 'விதுரா' (Vidura) ஆங்கில இதழில் இன்றைய பிரசுரத் துறை பற்றி எழுதிய கட்டுரையின் சில பகுதிகள் இவை.

—நா. கிருஷ்ணமூர்த்தி

இந்தியாவில் புத்தகப் பிரசுரம் ஆங்கிலத்தில் ஓரளவு நன்றாக இருந்தாலும் மற்ற மொழிகளில் அப்படி இல்லை என்றே சொல்லலாம். இந்தியச் சுதந்திரத்திற்கு முந்திய கால கட்டத்தில் எல்லாப் பிரசுரங் களும் உடன்பாடான கருத்துக்களையும், தியாகங்களையும் பற்றியுமே பேசின. அதன் பிறகு அவை மறையலாயின.

எல்லாவற்றையும் காரியார்த்தமாகவும், காசுக்காகவும் பார்க்கும் இக் காலத்தில் பதிப்பாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும் லாப நோக்கு முன் நிற்க ஆரம்பித்தது. பணம்தான் பிரதான இலட்சியம். எனவே எழுத்தாளர்கள் வெகு சுலபமாக விலைபோகும் மூன்றாந்தர எழுத்துக்களில் கவனம் செலுத்தினார்கள். பதிப்பாளர்களும் அதிக லாபம் தரும் எழுத்துக்களையே உவந்து ஏற்று வெளியிட்டார்கள்.

புள்ளி விவரங்களின்படி இந்தியாவில் ஆண்டொன்றுக்கு இருபதாயிரம் புத்தகங்கள் பிரசுரிக்கப்படுகின்றன. அநேகமாக எல்லாப் புத்தகங்களும் எழுத்தாளர்கள் அல்லாதவர்களால் எழுதப் படுகின்றன. தரமற்ற இப்படைப்புக்கள் அதிகாரபூர்வ நிறுவனங் களான சாகித்ய அகாடமி, நேஷனல் புக் டிரஸ்ட், வானொலி, பப்ளி கேஷன்ஸ் டிவிஷன் ஆகியவைகளால் ஆதரிக்கப்படுகின்றன.

சுதந்திரம்பெற்ற இந்த இருபத்தேழு ஆண்டு காலத்தில் இப்படிப்பட்ட மூன்ருந்தர எழுத்துக்களை விடா முயற்சியாக்க் கண்டெடுத்து நம்முடைய இலக்கிய அரியாசனத்தில் ஏற்றி வைத்துப் பெருமைபட்டு வருகிருேம்.

புத்தக வெளியீட்டில் மிகவும் முன்னேறிய நாடுகளிலும் இலக்கியப் படைப்புக்களை வெளியிடுவதில் குறைபாடு இருக்கவே செய்கிறது. எப்போதுமே எழுத்தாளர்கள் வேகமாகச் செயல்படுகிருர்கள். இருபது முப்பது ஆண்டுகளுக்குப் பிரசுரம் செய்ய இயலாத இலக்கியப் படைப்புக்களை வெளியிடும்படி வற்புறுத்துவார்கள். இந்தியாவில் நமக்கு அந்தமாதிரியான பிரச்னைகள் ஏற்படுவதில்லை; இருக்கும் சூழ்நிலைக்குத் தகுந்தாற் போலத் தங்களையே மாற்றிக் கொண்டு விடுகிருர்கள்.

படிப்பதற்குத் தேவையான பொழுதுபோக்கு எழுத்துக்கள் தேவை என்பதாலும், படைப்புக்களின் மீது விமர்சன நோக்கு இல்லாததாலும், எதையும் சுலபமாக ஏற்றுக் கொண்டு விடும் மனப்பான்மை இருப்பதாலும் இலக்கியத் தரமற்றவைகள் பிரசுரமாகி விடுகின்றன.

ஐரோப்பாவில் அச்சுத் தொழில் முன்னேற்றம் அடையும்போது அது மக்களின் புத்தியைக் கூர்மையாக்கும் காரியங்களுக்குப் பயன் படுத்தப்பட்டது. பத்தொன்பதாம் நூற்ருண்டில் இந்தியாவுக்கு அச்சுத் தொழில் வந்தபோது மேற்சொன்ன காரியத்தையே கவனமாகக் கொண்டது. சுதந்திரத்திற்குப் பிறகு தாழ்ந்த நிலைக்கு வந்துவிட்டது.

ஏராளமாக விற்பனையாகும் ‘குமுதம்’தான் தமிழ் வாசகர்களுடைய இச்சையைப் பிரதிபலிப்பதோடு அல்லாமல் புத்தகங்கள் தேர்ந்தெடுப்பதிலும் ஆதிக்கம் செலுத்துகிறது.

குஷ்வந்த்சிங்கினுடைய ‘இல்லஸ்ட்ரேடட் வீக்லி’ குமுதம் செய்வதையே ஆங்கிலத்தில் செய்கிறது.

வங்க, மலையாள மொழிகளில் சில இலக்கியப் பத்திரிகைகள் நிஜமாகவே இலக்கியத்திற்குச் செயல்படுகின்றன.

பாடப் புத்தகங்கள் தரமில்லாததற்குக் காரணம் நம்முடைய இலக்கிய முயற்சிகள் திருப்தி தரும் விதத்தில் இல்லாததுதான். நம்முடைய கவிதைகள் நன்ருக இருந்தால் ஒழிய நல்ல புத்தகங்களை நம்மால் தயாரிக்க முடியாது.

நம்முடைய பிரசுரகர்த்தாக்கள், குறிப்பாக ஆங்கிலத்தில் மிகவும் விசித்திரமாகச் செயல்படுகிருர்கள். கடந்த நாற்பதாண்டுகளில்—குறுகிய காலத்தில் அதிக லாபத்தைத் தரும் புத்தகங்களையும், சிறிதே மதிப்பு ஏற்படும் படைப்புக்களையுமே முனைந்து வெளியிட்டிருக்கிருர்கள். காஷ்மீர், பங்களாதேஷ் என்று அதிகமாகப் பேசப்படும் போது அது பற்றிய புத்தகங்களை அவசர அவசரமாகக் கொண்டு வந்து பணம் பண்ணுவது அவர்களுக்குச் சுலபமாகவே இருக்கிறது.

புத்தக வெளியீட்டாளர்கள் மிகுந்த ஆரவாரத்துடன் ஐந்து ஆண்டுகளுக்குச் செயல்பட்டு பிறகு ஓய்ந்துவிடுகிருர்கள். தொடர்ந்து செயல்படும் நோக்கோடு சிந்திப்பவர்கள் அநேகமாக இல்லவேஇல்லே. நிஜமான இலக்கியப் பிரசுரங்கள் பற்றிய முயற்சிகள் ஒரு சிலவே இருக்கின்றன.

படைப்பாளிகளும் பிரசுரகர்த்தாக்களும் தங்களுக்குள், எழுத்துக்கும். தயாரிப்புக்குமாக உள்ள ஒரு தரத்தை வளர்த்துக் கொண்டால் ஒழிய எழுத்தாளர்—பதிப்பாளர் உறவு வளராது. வர்த்தக ரீதியான உறவு வேண்டுமென்ருலும் எல்லாக் காலத்திற்கும் அதுவே நிலேயாக இருக்க வேண்டும் என்பதல்ல. அதையும் மீறிய ஒன்று செயல்பட வேண்டும்.

1940 வாக்கில் தமிழில் புத்தகங்கள் வெளியிட்டுவந்த வை. கோவிந்தன் 'தான் ஏற்காத புத்தகங்கள் எதையும் தான் பிரசுரம் செய்ததில்லே' என்று பெருமையாகச் சொல்லிக் கொள்வதுண்டு. அவரால் தொழிலே லாபகரமாக்க இயலவில்லே; ஆனுல் பதிப்புத் துறையில் அவருடைய முயற்சிகள் இன்றும் குறிப்பிட்டுச் சொல்லக் கூடியவை. கேரள கூட்டுறவு பிரசுர சொஸைட்டியைப் போல இந்தியாவில் வேறெங்கும் காண முடியவில்லே.

பதிப்பாளர்களோ, எழுத்தாளர்களோ தனிநபர்கள் புத்தகம் வாங்காதது பற்றிக் கவலேப் படுவதாகத் தெரியவில்லே. லட்சக் கணக்கில் வாசகர்கள் இருக்கும் இந்தியாவில் நல்ல புத்தகங்களுக்கு —குறிப்பாக இந்திய வெளியீடுகளுக்கு ஆதரவு கிடையாது. நூலகங்களுக்கு மொத்தமாகப் புத்தகங்களேத் தள்ள பிரசுரகர்த்தாக்கள் எடுக்கும் முயற்சியில் ஓரளவாவது தனி நபர்களிடமும் செலுத்த வேண்டும். இன்றையச் சூழ்நிலேயில் ஒருவர் ஒருவேளேச் சாப்பாட்டிற்கு பதினேந்து ரூபாய் செலவழிக்க முடியும்போது தரமான புத்தகத்திற்காக ஒரு இருபது ரூபாய் செலவழிக்க முடியும்.

எழுத்தாளர்களே தங்கள் புத்தகங்களேப் பதிப்பிக்கும் நிலே வந்துவிட்டது. இதுமாதிரியான காரியங்களே படைப்பாளி செய்யும் போது அவனது எழுத்து பாதிக்கப்படுகிறது. இந்த நிலே படைப்பாளி —பதிப்பாளர் ஆகிய இருவருக்குமே நல்லதல்ல.

சமீபத்தில் டெல்லியில் நடந்த கூட்டத்தில் பதிப்பாளர்களும், எழுத்தாளர்களும் ஒன்ருகவே வந்தாலும் பதிப்பாளர்கள் அநேகமாக ஐந்து நட்சத்திர ஓட்டல்களிலேயே தங்கினர்கள். எழுத்தாளர்கள் அவர்களின் கருணேயினுல் வேறு இடத்தில் விருந்தாளிகளாகத் தங்கினர்கள். இருபது ஆண்டுகளுக்கு முன்புவரை இப்பதிப்பாளர்கள் பணக்காரர்கள் அல்ல. எழுத்தாளர்களின் படைப்புக்களேப் பிரசுரம் செய்து பணம் சேர்த்துக் கொண்டவர்கள்.

நேஷனல் புக்டிரஸ்ட், சாகித்ய அகாடமி, பப்ளிகேஷன்ஸ் டிவிஷன் ஆகிய அரசாங்க நிறுவனங்களின் புத்தகங்கள் சாதாரண வாசகர்களுக்கு அதன் தரம்பற்றி சந்தேகத்தை ஏற்படுத்துகின்றன. ●

# வெளியே செல்லும் தமிழ்

## II

சென்ற சில ஆண்டுகளில் தமிழ் எழுத்துலக சர்ச்சைகளில் ''சர்வதேச இலக்கியம்'', ''சர்வதேச இலக்கியத்தரம்'' என்பன போன்ற சொற்றெடர்கள் அதிகமாக அடிபட்டு வந்தன. இந்த சொற்றெடர்களுக்குப் பின்னே தற்காலத் தமிழிலக்கியத்தை உலகின் இலக்கிய அரங்கில் சேர்த்து, அதற்குரிய மதிப்பை விரைவாகப் பெற்றுத் தரவேண்டுமென்ற ஆவலும், துடிப்பும், அவற்றின் அடியில் ''சர்வதேச இலக்கியத் தரம்'' என்பது ஏதோவொரு இனங்காணமுடியாத பொருள், லண்டன் மாநகர இலக்கிய வாரியத்திலோ அல்லது நோபல் பரிசுக்கூடத்திலோ விறைத்து நிற்கும் காவலர்களுக்கு நடுவில், சீதோஷ்ண நிலைமைகள்கூட பாதிக்காது ஒரு கண்ணுடிக் கூண்டில் பாதுகாக்கப்படுவது போல ஒரு அப்பாவித் தனமான எண்ணமும் இருந்தது. சர்வதேச இலக்கியத் தரம், நல்ல வேளையாக அவ்வாறில்லை.

முதிர்ந்த ரசனையும், துல்லியமான பார்வையும், தனது ஜீவனிடத்திலிருந்து அவற்றை வெளியிடத் தனித் தன்மையுடன் கூடிய நுண்மையான கை வண்ணமும் கொண்டிருந்தால் ஒரு கலைனுக்குக் கலை கைகூடிவிடுகிறது; உடன் கூடவே இத்தரமும் கிட்டி விடுகிறது.

ஒரு நாட்டின் மொழியின், ஒரு காலத்தின் இலக்கியப் படைப்புக்கள் எப்போது இத்தரத்தை எட்டுகின்றன என்பது அக்காலத்துப் பொது ரசனையுணர்வையும், அது விரிவதற்காக, மேம்படுவதற்காகத் தன்னை உட்படுத்திக் கொள்ளும் சோதனைகளைப் பொறுத்ததாக அமைகிறது. எப்போதெல்லாம் இலக்கியமோ அல்லது மற்ற கலைகளோ அவற்றின் சிகரத்தைத் தொடுகின்றனவோ அப்போதெல்லாம் இந்த உண்மை நிரூபணமாகின்றது.

இவ்வாறுன சோதனைகளின் முதலான காரணமும் காரியமும், பல திசைகளிலிருந்து கருத்துக்களையும், பார்வைகளையும், வடிவங்களையும், வழி முறைகளையும் தந்தும், பெற்றும் நிகழும் பரிமாறுதல்களாக இருப்பதும் இவ்வுண்மையின் மற்றேர் நிரூபணமாகின்றது. இந்தப் பரிமாற்றங்களில் பேணப்படுகின்ற சோபையான மாற்றங்களே, பெற்றுக் கொள்ளும் இலக்கியத்தின் புதிய திசைகளை நிர்ணயிக்கின்றன. இத்தகையப் பரிமாற்றங்களின் மற்றேர் சிறப்பு, பெரும்பாலும் வெளியே தெரிய வராது, ஸ்தாபனங்களின் உதவிகள் இல்லாது ஒரு தனி மனிதனே அல்லது அதிகமாகப் போனுல் ஒரு சிறு குழுவோ

---

மேற்கொள்ளும் தேடல்களும், அத்தேடல்களில் தேர்ந்த ரசனையுணர் வாகவும், இந்த ரசனை உணர்வு பெரும்பான்மையான மக்களாலும், பிற்பட்ட காலத்தவராலும் ஏற்கப்படுவதேயாகும்.

சர்வதேச இலக்கிய அரங்கையெட்டும் முதற் கண்ணுக, அண் மையில் சில முயற்சிகள் இந்திய மொழிகளில் மேற்கொள்ளப்பட்டன. அவற்றின் முதல் விளைவுகளில் ஒன்ருக பெங்குவின் புத்தக வரிசை யில் ''இந்தியாவில் புதிய எழுத்துக்கள்'' வெளி வந்திருக்கின்றது.

தனி ஒருவரின் பொறுப்பில் வெளிவந்ததால் இப்புத்தகம் இன் றைய இந்திய எழுத்துக்களைப் பற்றி அழுத்தந் திருத்தமான சில முடிவுகளைக் கொண்டிருக்கின்றது. இந்த முடிவுகளோடு முரண்படு வது மிகவும் எளிது; தொகுப்பாசிரியர் அடில் ஜஸ்ஸாவாலா, முன்னு ரையில் தனது எல்லைகளை—முக்கியமாக, தனக்குத் தெரிந்த இந்திய மொழிகள் சிலவேயென்று—வரையறுத்துவிடுகின்ருர். ஆனுலும், எழக்கூடிய முரண்பாடுகளுக்கப்பால், புறப்பார்வை ஒன்றில் தற்கால இந்திய இலக்கியம் எவ்வாறு தோற்றமளிக்கக்கூடும் என்ற அடிப் படையில், இப்புத்தகத்தின் முடிவுகளை, ஒரு வாதத்திற்கென்ருவது, ஒப்புக்கொள்ளுதல் இந்திய இலக்கியத்தில் அக்கறை கொண்டவர் களுக்கு ஒரு நிதானத்தையும், தெளிவையும், முக்கியமாக மறுபார்வை யையும் தரக்கூடும்.

முன்னுரையில், ஜஸ்ஸாவாலா இந்திய இலக்கியம் பற்றி, அதற்கும் அடிப்படையான இந்தியர் வாழ்க்கை, வரலாற்று, சமூக, பொருளாதார, கல்வி, மற்றும் நாளிதழ், புத்தக விற்பனை மேலும் இலக்கிய நாட்டம் ஆகியவை பற்றிய விரிவான ஒரு கண்ணேட் டத்தைத் தருகின்ருர். ஜஸ்ஸாவாலாவின் தொகுப்பில், உருது, இந்தி, மராத்தி, குஜராத்தி, வங்காளம், ஒரியா, பஞ்சாபி, கன்னடம், மலையா ளம், தமிழ், இந்தோ-ஆங்கிலம் முதலிய மொழிப் படைப்புக்கள். அம்மொழிகளுக்கு நியாயம் செய்கின்றன.

தொகுத்த படைப்புக்களை வரலாற்று மற்றும் சமூகவியல் பார்வைகளால், மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கொள்கிருர். முதற் பகுதியில், நாட்டு விடுதலை, பாகிஸ்தான் பிரிவினை, மொழிவாரிப் பகுப் பினுல் குறுகிய மனப்பான்மையின் பிறப்பு, இந்திய-பாகிஸ்தான் போர் ஆகியவற்றின் வெளிப்பாடுகளையும், இரண்டாவது பகுதியில், சுதந்திர இந்தியாவில் மாறி வரும் சமுதாயக் கட்டுமானங்களினுல் எழுந்த படைப்புக்களையும், மூன்ருவது பகுதியில் தனிமனிதவுணர்வின் எழுச்சிகளையும் தந்திருக்கின்ருர்.

நாடு பிளந்து போகும்போது ஈரமற்ற அரசாங்கத்தால், ஸ்வீக ரித்த நாட்டிலிருந்து விரட்டப்படும் ஒரு முஸ்லீம் இளைஞனின் தவிப்பை, 'தீயாறு' என்ற நாவலின் 'நாடற்று' என்ற ஒரு பகுதியில் சித்தரித்திருக்கிருர் திருமதி க்வார்த்துலன் ஹைதர். ஆர். பார்த்தசாரதியின் ஆங்கில மொழியாக்கத்தில் புதிய வேகத் துடன் ந. பிச்சமூர்த்தியின் கவிதை ''தேசியப் பறவை'' பிரகாசிக் கின்றது. இந்தியாவைப் பற்றி குறை சொல்லும் நைப்பாலுக்கு,

நிஸிம் இசேக்கியல் பதில் சொல்லுகிருர். ஒரு பொருள் வழி விமர்சனக் கட்டுரையில். மொழியுடன் பின்னிப் பிணைந்து உறவு கொள்பவர் லா. ச. ராமாமிருதம். அவரது 'மண்' என்ற சிறு கதை இங்கு அதன் மொழியிலிருந்து பிரிக்கப்பட்டு வேற்று மொழிக்கு எடுத்து செல்லப் பட்டுவிட்டதால், அதனுடைய அடித்தளச் சலனங்களை விட்டுக் கொடுத்துவிட்டு, மேல் புறத்தில் மூட நம்பிக்கைகளின் ஒரு எடுத்துக் காட்டுப்போலவாளுலும், வலுவான மனித நேயத்தால் இச்சிறுகதை பிழைத்து விடுகின்றது. எம். டி. வாசுதேவன் நாயரின் ''விதைகள்'' சின்னஞ்சிறு விஷயங்களைக்கூடத் தொட்டு விவரித்து பொருளாதார ரீதியில் முன்னேறும் ஒரு கிராமீயக் குடும்பம் எவ்வாறு மனிதவுறவு களின் அர்த்தங்களை இழந்துவிடுகிறதென்பதைச் சுட்டிக் காட்டுகின் றது. மலையாள இலக்கியவுலகைக் கலக்கியதாகச் சொல்லப்படும் ஓ. பி. விஜயனின் ''கசாக்கின் இதிகாசம்'' என்ற நாவலிலிருந்து ஒரு பகுதி ''மாற்றம்'' என்ற தலைப்பில் தரப்பட்டுள்ளது. தன்னைச் சூழ்ந்த வர்களிடமிருந்து விலகி முன்னே போகும் ஒருவனுக்கு சாதிகள் போன்ற கொக்கிகளால் பின்னிழுக்கும் சமுதாயம் எத்தகைய தண் டனைகளைத் தருகிறதென்பதை படம்பிடித்துக் காட்டுகின்றது. சில புதிய பார்வைகளில் இந்த சமுதாயத்தை நோக்குகின்ருர் தனது இரண்டு கவிதைகளில் கீவ் படேல். விந்தா கரன்திகர், தூமில் ஆகிய வரின் கவிதைகளும், தூத்நாத் சிங்கின் சிறுகதையும் மேல்நாட்டிலக் கியங்களின் பாதிப்பை பிரதிபலிக்கின்றன.

பாலசந்திர நெமடேயும் (மராத்தி) கியான்ரஞ்சனும் (இந்தி) பி. லங்கேஷும் (கன்னடம்) அசோகமித்திரனும்(தமிழ்) வளர்ந்துவரும் இந்தியச் சிறுகதையை எடுத்துக் காட்டியிருக்கிருர்கள். தமிழிலக்கி யத்தின் புதிய பண்டிதர்கள் அசோகமித்திரனின் கதையை வைத்துக் கொண்டு ஓ. ஹென்றியின் உத்தியை அசோகமித்திரன் எப்படி வெற்றிகரமாகப் பயன்படுத்தியிருக்கிருரென்று இன்னும் மூன்று வரு டங்களுக்கு விவாதிப்பார்கள்.

சாண்டிபன் சட்டோபாத்யாய் ''புரட்சியும் ராஜ்மோகனும்'' என்ற சிறுகதையில் புரட்சியைத் தன் வாழ்வில் கொண்டுவரமுடியாத ராஜ்மோகன் (வயது 40) தனது புத்தக அலமாரியை கொளுத்தி எரித்துவிட்டு, சுவற்றில் படிந்த புகைக்கறையை, ஊரிலிருந்து திரும்பி வரப்போகும் மனைவியிடம் எப்படிச் சொல்வது என்ற கவலையில் ஆழ்ந்துவிடுவதைத் தீட்டியிருக்கிருர். 'ப்ரதித்வந்தி', 'ஆரண்யேர் தின்ராத்ரி' ஆகிய திரைப்படங்களின் கதாசிரியர், சுனில் கங்கோவாத் யாய் ''விடுதலையாக விழைந்த ஒருவன்'' என்ற சிறுகதையில் மன நோய் விடுதியிலிருந்து தனது தாயாரை விருப்பமின்றி மீட்கப் போனவன் எவ்வாறு தானே பைத்தியமாகிவிடுகிருன் என்று சித்தரித் திருக்கின்ருர்.

டாஸ் பாஸ்ஸோவினுல் முதலில் பயன்படுத்தப்பட்ட உத்தி, நாளேட்டுச் செய்திகளை இடையிடையே கோர்த்துக் கற்பனைப் படைப் புக்களை ஆக்குவது; இந்த உத்தி ஐம்பதுகளிலேயே இலக்கியவுலகத் திலிருந்து விடைபெற்றுக் கொண்டுவிட்டது. ஆனுல் வியாஸ்சாரங்

(மராத்தி) இந்த உத்தியை வைத்துக் கொண்டு ஒரு சிறுகதையை 1967ல் எழுதியிருக்கிருர். இவருக்கு சோதனை காலங் கடந்து கிட்டியிருக்கிறதென்ருல். மது றை (குஜராத்தி) செய்துள்ள சோதனை சொற்களை இடவலமாகவும். குப்புறவும் போட்டு வாசகர்களுக்கு வெறும் உறுத்தலைத் தந்துவிட்டு, இலக்கைவிட்டு கதையின் சாரத்தை வேறெங்கோ கொண்டுபோய் விடுகிறது.

இவற்றிற்கெல்லாம் மாருக, கிஷோரி சரண்தாஸ் (ஒரியா) ''ஒரு சிவந்த மாலை நேரம்'' என்ற சிறு கதையில், புரட்சி வயப்பட்ட ஒரு மத்தியவர்க்கப் பிராணி தன்ஞல் வெறுக்கப்படும், தனது பொருமைக்காளான. மற்ருெரு மத்திய வர்க்கத்தினன் உதவியோடு தெருக் கலகம் ஒன்றிலிருந்து தப்புவதை கண்ணுமூச்சியாடும் நகைச்சுவையுடன் எழுதியிருக்கிருர்.

மௌனியின் ''சாவில் பிறந்த சிருஷ்டி'' இத்தொகுப்பில் அவரது மொழியின் தனித் தன்மையான, காலதேசமற்ற நிச்சயமின்மையை, ஆங்கில மொழியாக்கத்தில் துறந்துவிட்டு, கனமாக, மனித மனங்களின் ஆழமான போக்குகளின் சித்திரமாக வெளிவந்துள்ளது. சுப்பையர், அவரது மனைவி கௌரி, மற்றும் அவர்கள் பயணத்தில் கூட வரும் ஒருவாலிபன் இவர்களிடையே நடக்கிறது இந்தக் கதை, ஒரு இந்திய புராணவழிப்பட்ட சிந்தனையை உள்ளடக்கிக் கொண்டு. நல்ல மொழி பெயர்ப்பு.

கமலாதாஸின் ''பழைய நாடகக் கொட்டகை'' என்ற கவிதையைப் படித்து மகிழ்வதை நீங்களே செய்யவேண்டும். கோபால கிருஷ்ண அடிகாவின் ''கிணற்றுத் தவளை'' என்ற கன்னடக் கவிதை இந்திய இதிகாசங்கள் இன்றைய கவிதைக்கு எத்தகைய அடித்தளமாக அமையக்கூடுமென்று எடுத்துக் காட்டுகிறது. ராவ்ஜிபடேலின் ''அங்கே'' என்ற குஜராத்திக் கவிதை தனிமனிதனின் விரக்தியை ஒரே ஒரு படிமத்தில் சொல்லிவிடுகிறது.

இத்தொகுப்பில் உள்ள ஒரு நாடகம் பதல் சர்காரின் ''மற்றும் இந்திரஜித்தும்'' என்ற புகழ் பெற்ற படைப்பு. இன்றைய மனிதர்கள், கலைபடைப்புக்குக்கூட சிக்காது எவ்வாறு முகமற்றுப் போகிருர்களென்பதை மிக எளிமையாக ஆனுல் நூதனமாக, ஒரு தொலைவை உருவாக்கி, அத்தொலைவில் அன்ருட நடை முறையை நடத்திக் காட்டிவிடுகின்றது இந்த நாடகம்.

பிரமாதமான படைப்புக்களாக இத்தொகுப்பில் இடம்பெறுவது மூன்று கவிதைகள்; முன்னர் சொல்லப்பட்ட கமலாதாஸின் கவிதையைத் தவிர்த்து இரண்டு கவிதைகள். இந்த இரண்டு கவிதைகளின் பெயரை இங்கு சொல்கையில் இந்த மதீப்பீடுகள் மீது ஒரு சந்தேகமும். பாரபட்சமானது என்ற குற்றமும் கூட கூறப்படலாம். இருப்பினும் இந்த இரண்டு கவிதைகளும் அவற்றின் சொந்த மொழியில் அவற்றிற்குரிய மதிப்பைப் பெருது, இந்த ஆங்கிலமொழியாக்கங்களில் மின்ன காரணங்கள் என்னவாக இருக்கக் கூடுமென்பதை இலக்கிய

அன்பர்களின் கணிப்பிற்கு விட்டுவிடலாம். முதலில் குறிப்பிடப்பட்ட ந. பிச்சமூர்த்தியின் ''தேசியப் பறவையும்'' ஷண்முக சுப்பையா வின் ''குசலம் கேட்டால்'' என்ற கவிதையுமே இந்த இருபடைப்புக்கள். ஷண்முக சுப்பையாவின் கவிதைகள், எளிய ஆனல் ஆழமாகத்தாக் கும் வகையில் டி. கே. துரைஸ்வாமியினுல் மொழிபெயர்க்கப் பட்டி ருக்கின்றன. இங்கு இந்த தேர்ந்த ஆங்கிலமொழி யாக்கங்களில் இவற்றைப்படிக்கும்போது, இவை உயர்ந்து நிற்பதைக்காணும்போது, கவிதை, மொழியுடன் இயைந்து பிரிக்கமுடியாது கலந்திருக்குமா அல்லது கடந்து நிற்குமா என்ற கேள்வி எழுந்தாலும், இந்த இரு கவிதைகளும் வேடங்களேதுமில்லாது, நிர்வாணமாய், தனியாய் தம் வலிமையினுல் தம்மை இருத்திக் கொள்வதைக் காணமுடிகின்றது. இதே சுத்தமான நிலையினுல்தான் கமலாதாஸின் கவிதையும் வெற்றி பெறுகிறது. தம்தூய்மையினுலே ஒளி பெறுகின்றன இம் மூன்று கவிதைகளும்.

இத் தொகுப்பைப்பற்றிய இரண்டு முக்கியமான எண்ணங்களை இங்கு குறித்தல் வேண்டும். ஐஸ்ஸாவாலா, தனது முன்னுரையில் மேல்நாட்டு நாவல், சிறுகதைபோன்ற வடிவங்களை இந்திய ஆசிரியர் கள் தன்வயப்படுத்திக் கொள்வதைப்பற்றிக் குறிப்பிடுகையில், இவ் வடிவங்களை இந்திய ஆசிரியர்கள் எவ்வாறு வெற்றிகரமாகப் பயன் படுத்திக் கொள்கிருர்கள் என்று பார்ப்பதுதான் நியாயமானது என்று தன் கருத்தைச் சொல்லுகின்ருர். நியாயமான கருத்து. ஆனல் இத் தொகுப்பில் தேர்ந்தெடுத்துள்ள படைப்புக்கள் எவ்வாறு இந்த வடி வங்களில் வெற்றிபெறுகின்றன என்று குறிப்பிடத் தவறி விடுகின்ருர்; அல்லது இக் கட்டுரையில் சில சிறுகதைச் சோதனைகள் பற்றிக் குறிப் பிட்டதுபோல மற்றவர்கள் செய்யட்டுமே என்று ஒதுங்கி விடுகின்ருர்.

மற்ருேர் எண்ணம் சிறிது சிக்கலானது. பொதுவாக ஆங்கில அமெரிக்க மற்றும் ஐரோப்பிய இலக்கியங்களில் மிகுந்த பழக்கங் கொண்டவர்கள், சொந்த நாட்டுப் படைப்புக்களை நோக்கும்போது, தங்களுக்கு பரிச்சயமான, பிடித்தமான ருசிகளையே அவற்றில் தேடு வதையும், அவ்வாருன ருசிகளைத் தரும் படைப்புக்களை சிறந்த படைப்புகளாகக் கணிப்பதும் நமக்குப் பழக்கமானவொன்று. உலகப் போர்கள் மூண்டதால் மேலைநாடுகளில் எழுந்தவிரக்தியும், கசப்புணர் வும், இத்தகைய ஆசிரியர்களை, இந்நாட்டுப் படைப்புக்களிலும் அவ் வுணர்ச்சிகளைத் தேடவைக்கின்றன; அவ்வாறுதேடி, கண்டவைகளை மிகச் சிறந்த படைப்புக்களென்று கூறவைக்கின்றன. உலகமே குறுகிப்போனதால், எங்கும் தொடர்புகள் பெருகிப் போனதால், வாழ்க்கை இயந்திரமாகிப் போனதால், இந்த விரக்தியும், கைப்பும், எங்கும் காணக்கிடைக்கின்றன என்பதை மறுப்பதற்கில்லை. ஆனல் இவைதான் இன்றைய இந்திய இலக்கியத்தின் அடிநாதம் என்று தொட்டுக் காட்டுகையில் ஒப்புதலைவிட மறுத்தலே இயல்பாக இங்கு எழக்கூடும். இதற்கான காரணங்களை ஐஸ்ஸாவாலாவே, இந்திய ஆசிரியர்கள் விரும்பிப் படிப்பது கேமு, தாஸ்தாவெஸ்கி, காஃப்கா, மற்றும் சார்த்ர் என்று குறிப்பிடுகிருர். இதை உணர்ந்த ஐஸ்ஸாவாலா நம்பிக்கை கொண்ட வாழ்க்கையை ஒப்புக் கொள்ளும் படைப்புக்களை ஏன் தேடவில்லை என்பது வியப்பான கேள்வியாக எழுகின்றது. இந்தத்

தீவிரமான இரு கேள்விகளுக்கப்பால் நோக்கும்போது இத் தொகுப்பு ஒரு மகத்தான சிறப்பைப் பெறுகின்றது.

பொதுவாக அரசாங்க ஆதாரவுபெற்ற நிறுவனங்கள் இதுவரை வெளிக் கொணர்ந்த தொகுப்புக்களில் இத்தனை துணிவோ அல்லது கூர்மையான நோக்கோ இருந்ததில்லை. ஒரு பிடிப்பற்று, கலகலத்து போய்விடும் அவை. வசதிகள் நிறைந்த நிறுவனங்களுக்கு அது பிரச்சினையானுல் இத்தகையத் தொகுப்பை முயற்சிக்கும் ஒரு தனி மனிதருக்குக் குறைந்தது பதினுன்கு மொழிகளில் சிறுகதை நாவல், நாடகம், மற்றும் கவிதை என்று பல துறைகளில் படைப்புகளை தேர்ந்து, தொகுப்பதென்பது பிரமாண்டமான சோதனையாக, உருவாகி அச்சுறுத்தி தொலைவில் தள்ளிவிடக் கூடியதாகியிருக்கும் இவ்வகைத் தொகுப்பு இவற்றை மீறி, இந்திய மொழிகளுக்காக இவ்வகையான தொகுப்பு இப்போதுதான் ஐஸ்ஸாவாலாவினுல் வெளி வந்திருக்கின்றது. சர்வதேச இலக்கியமும், இந்திய இலக்கியமும் அவருக்கு நன்றி சொல்லும்.

இதோடு இவ்வகையான தொகுப்பு, இந்திய இலக்கியத்திற்கு செய்யக்கூடிய பெருந்தொண்டானது; மற்ற நாட்டுப் படைப்புக் களோடு இந்தியப் படைப்புக்களை ஒப்பிட, மற்றவர்களுக்கு மட்டு மில்லை, இந்தியர்களுக்கும் மிக ஆவசியமாக செய்துள்ளதைக் குறிப் பிடவேண்டும். இத்தகைய ஒப்பிடல்களினுல் எழக்கூடிய சிந்தனைகள் பெரும் பயன்களை விளைவிக்கும். உதாரணமாக, தமிழில், அதிகமாக மொழிபெயர்க்கப்பட்ட ஆசிரியராகக் கூறப்படும் அகிலன் அவர் களின் படைப்புக்கள் இவ்வகைத் தொகுப்புக்களில் பெறும் இடம் என்னவென்பதையும், அதே போல், மிகவும் செல்வாக்குப் பெற்ற சிறுகதையாசிரியர் ஜெயகாந்தனின் சிறுகதைகள், ஐஸ்ஸாவாலா வினுல் ஏன் இத்தொகுப்பில் சேர்க்கப்படவில்லையென்பதும் எண்ணிப் பார்க்கப்பட வேண்டியவை. இத்தொகுப்பு, மொழிகளால் பெரிதும் பிரிக்கப்பட்ட இந்தியர்கள் மற்றும் இந்திய எழுத்தாளர்கள் தம் மொழிப் படைப்புக்களோடு, மற்ற இந்திய மொழிப் படைப்புக்களோடு ஒருங்கே காணும் வாய்ப்பையும் ஏற்படுத்திக் கொடுத்துள்ளது.

இப்போது இத்தொகுப்பு வெளிவருவது தவிர்க்க முடியாதது; தேவையானது. சமூக, அரசியல் மற்றும் பொருளாதாரப் பிரச்னை களால் ஒவ்வொரு இந்தியனும் தனிப்படுத்தப்பட்டு, தான் ஒரு இந்தி யன்தானு என்று எண்ணிப் பார்க்கும் சூழ்நிலைக்கு ஆளாகிவிட்ட வேளையில், இந்திய நாகரிகத்தின், பண்பாட்டின் அடித்தளமொன்ருக இலக்கியம் அமைந்து, அவ்விலக்கியத்தின் வெளிப்பாடாக வெளிவரும் இத்தொகுப்புப் போன்றவைகள், கலங்கி நிற்கும் இந்திய மனத்திற்கு அளவிடமுடியாத நன்மைகளைச் செய்யக்கூடும். ஏனெனில் எல்லா வற்றிற்கும் மேலாக, இந்தியப் படைப்புக்களின் ஒரே நோக்கம், மேலோட்டமாக இல்லாது, உரத்தகூவல்கள் இல்லாது, பல்வேறு பார்வைகளையும், பல்வேறு வடிவங்களையும் கடந்துநிற்கும் அக்கறை, இந்தியன் என்ற மனிதனுக்காகவென்று ஆழமாக எடுத்துக் காட்டி யிருக்கின்றது இத்தொகுப்பு.

—பதி

# இரண்டு பச்சைக் கிளிகள்

## ஆர். ராஜகோபாலன்

இரண்டு நாட்களாக இலேசாக இருந்த தலைவலி அன்றிரவு மிகக் கடுமையானதொன்றாக மாறத் தொடங்கியது. இந்தத் தலைவலியை ஒருவாறு மட்டுப்படுத்தாவிட்டால் பிறகு அதிக சிரமப்பட வேண்டும் என்று தெரிந்திருந்தும் இவன் தலைவலியை அதன்வழியே விட்டு விட்டு இப்போது மிகுந்த கஷ்டத்துடன் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான். சிறுவயதில் தோன்றிக் கொண்டிருந்த ஓர் உணர்வு இவனை மீண்டும் பாதித்தது. இரவின் ஒளியின்மை விழி தெரியாமல் தட்டுத்தடுமாறும் ஒருவனாக இவனை எப்போதும் பயப்படுத்தும். கண்ணாமூச்சி விளையாட்டில் இவனது கண்களை ஐம்பது எண்ணிக்கை வரை யாரேனும் மூடிக்கொள்வதே இவனுக்கு நீண்ட நேரமுடையதாய்த் தோன்றும். மற்றவர்களைத் தேடிப் பிடிப்பதைவிட தன் கண்களால் வெளியில் பார்க்கப்படுவதையே முதலில் விரும்புவான் இவன். தூக்கம் வராமையால் இரவு மீண்டும்துன்புறுத்த ஆரம்பித்தது. அடிக்கடி வந்து கொண்டிருக்கும் இந்தத் தலைவலி எந்தவித மருந்துக்கும் கட்டுப்படாதிருந்தது. தலைவலி வரும்போது இவனுக்கு தன்மேலேயே நம்பிக்கையின்மை அதிகமாகிவிடும். இந்த உபாதையை எதற்காகத் தான் பொறுத்துக் கொள்ளவேண்டும் என்றே இவனுக்குப் புரியவில்லை. இந்தமுறை தலைவலி முன் எப்போதையும் விடக் கடுமையானதாகப் பட்டது. படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து கொண்டான். தலையணையை திருப்பிப் போட்டுக் கொண்டான். தலையைத் தலையணையில் அழுத்திக்கொண்டு கண்களை இறுக மூடிக் கொண்டான். ஒருபக்கம் தலைவலியின் கொடுமை. ஒரு பக்கம் விழிப்பினால் ஏற்படும் தொடர்ந்த எண்ண ஓட்டம். சில ஆண்டுகள் முன்வரை எதற்காகவேனும் பயம் வந்தால் தனக்கு மிக அழகிய மனைவி வருவதைப் போன்று நினைத்துக் கொண்டு தன்னை மறந்து போவது வேடிக்கையாகவும் தன்னைத் தாண்டிப் போனதொன்றாயும் இப்போது இவனுக்குத் தோன்றியது. கைகளிரண்டையும் தலைக்கு மேலே கோர்த்துக் கொண்டு நெற்றியை சுருக்கிக் கொண்டான். இப்போது சங்கீதம் கேட்டால் தேவலை என்று தோன்றியது.

சங்கீதம் எப்போதும் இவனுக்கு ஒருவித ஆழ்ந்த அனுபவமாகவே இருக்கும். சங்கீதம் கேட்கத் தொடங்கும் போதே அதில் லயித்துப்போவான் இவன். ராகங்கள் வளர வளர தன்னை மறந்து நிலஉலகையும் கலைநிலையையும் தாண்டினதொரு அனுபவம் ஏற்படும். கொஞ்ச நேரம்வரை அதன் கலையம்சத்தில்ஈர்க்கப்பட்டாலும் போகப் போக சங்கீதம் ஒரே பொருளாய் இவனை வயப்படுத்தும். சங்கீதம்

எங்கிருந்து வருகிறது தான் அதை எங்கு வாங்கிக்கொள்கிறோம் என்று தெரியாமல் குழம்பிப் போவான். தனக்கும் சங்கீதத்துக்கும் உள்ள இடைவெளி குறுகிப்போய் தானும் சங்கீதமும் மிகமிக நெருங்கிவந்து கொண்டிருப்பதை உணர்வான் தன்னுடைய இதயஓட்டம் கொஞ்சம் கொஞ்சமாய் சாந்தமாகி சங்கீத லயத்துடன் ஒன்றிப்போவதை உணர்ந்து கொள்வான். அமைதியின் பரந்த சாம்ராஜ்யத்துக்குள் நுழைந்து கொள்வதும் இவனுக்குத் தெரியாமலேயே நடந்துவிடும். அந்த எல்லையில்லா பரப்புக்குள் தான் உல்லாசமாய் குதூகலத்துடன் பறந்து பறந்து போவதைப் போன்று உணர்வான். அந்த அனுபவத்திற்குப் பிறகு ஏற்படுவைதான் இவனுக்குப் புரியவில்லை. சங்கீதம் கேட்ட பிறகு எல்லாவையுமே ஆழ்ந்து போனது போல் இருக்கும். விருப்பு வெறுப்பு இவைகளே தேவையில்லாத மாதிரி எல்லோரும் எல்லாவையுமே இவனுக்கு வேண்டியவர்களாக நெருங்கி இருப்பவை போல் படும். விவரிக்க இயலாத அமைதியின் ஆழத்திற்கு போய் விட்டதைப் போன்று இருப்பான். கருணையும் அன்பும் தன் பார்வையிலிருந்து பொங்கி வழிந்து கொண்டிருப்பதைப் போன்று இருக்கும். எந்த நொடியும் கண்களிலிருந்து கண்ணீர் விழுவதைப் போன்று கண்மணிகள் மிகுந்த கனத்துடன் இருக்கப் பார்ப்பான். எந்த வித சலனத்திற்கும் உட்படாது கனிவோடு இவனால் அப்போது இருக்க முடியும். எப்போது அந்த நிலையை இழக்கிறோம் என்பது இவனுக்குப் புரியாத புதிராக இருக்கும். அந்த இழப்பை நிறைவு செய்துகொள்ள முடியாமல் தவித்துப் போவான். அந்த நிலையிலிருந்து விடுபட்டுவிட்டோம் என்ற எண்ணம் கோபத்தையோ வருத்தத்தையோ ஏற்படுத்தாது. மாறாக ஏதாவதொரு நிலையில் தொடர்ந்து இருந்தால் தேவலாம் என்று தோன்ற திணறிப் போவான்.

இன்னமும் இவன் தூங்காமல் விழித்துக் கொண்டிருப்பதை நினைத்துக் கொண்டான். தலைவலி கடுமையானதாகவே சிறிதும் வலிகுறையாமல் இருந்தது, தலையை இருகைகளாலும் பிடித்துவிட்டுக் கொண்டான். யாரோ சம்மட்டியால் அடிப்பது போல் தலையின் இரு பக்கப் பகுதிகளும் விட்டுவிட்டு வலிக்க ஆரம்பித்திருந்தன. எழுந்து ஜன்னலருகில் சென்று நக்ஷத்திரங்களே இல்லாத வானத்தைப் பார்த்தான். தண்ணீர் குடித்தான். தூணில் சாய்ந்து கொண்டான். ஒரு துண்டால் கண்களை மறைத்து தலையைச் சுற்றிக் கட்டிக்கொண்டு படுத்தான். ஏதோவொரு நிச்சயமின்மை தன்னை மெதுவாக ஆதிக்கம் கொள்வதை உணர ஆரம்பித்தான். எப்போதோ ஏற்பட்ட ஒரு வித வெறுமை இவனை பிடித்துக் கொண்டது.

கொஞ்சநாட்களுக்கு முன் இவன் ஒரு மலைத்தொடருக்குச் சென்றிருந்தான். இவன் போகும்போதே இரவு லேசாக காண ஆரம்பித்திருந்தது. பசுமையான நெல்வாடை வீசும் வயல்களை தாண்டிச் சென்றபோது ஏதோ அரிதான வொன்றைக் காணச் செல்வதுபோல் வேகமாகச் சென்றான். கொஞ்சநேரத்தில், இவன் மலைகளை அடைந்தான். மலைகள் சுற்றிலும் பெரியனவாகவும் சிறியனவாகவும் அடைத்துக் கொண்டிருந்தன. பசுமையே காண முடியாதபடி கரடு

முரடான கற்கள் மலிந்து கிடந்தன. மேலும் மேலும் மலைகளுக்குள் புகுந்து சென்ருன். சுமார் இரண்டு மைல் தூரம் மலைகளுக்குள் சென்றிருப்பான். போகப் போக இவனுள் இனம் தெரியாத பயம் ஒன்று தோன்றித் தோன்றி மறைந்தது, எனினும் தவிர்க்க முடியாமல் சென்று கொண்டிருந்தான். மலைகளில் ஏறி சுற்றுப் புறத்தைக் காணப் புகுந்த போது மனது ஆட ஆரம்பித்தது. சிவந்த உருண்டையான சூரியன் கொஞ்சம் கொஞ்சமாக ஒரு மலையினுள் மறைவதைப் பார்த்தான். சூரியன் தன் வடிவத்தை இழக்க ஆரம்பித்தபோது மிகுந்த அவதிக்குள்ளாளுன். கடைசிப் பகுதி மறைய இருக்கும் போது இவனுள் திடீரென்று இருள் சூழ்ந்துவிடுமோ என்ற அச்சம் எழுந்தது. சூரியன் முழுமையாக மறைந்து போனபோது மற்றப் பகுதிகளை சுற்றிச் சுற்றிப் பார்த்தான். எந்தவித இயக்கத்திற்கும் இடமே இல்லாதிருந்தஅங்கு நிசப்தம் உரத்தகுரலெடுத்துக் கத்துவதையும் அதை மலைகள் பயங்கரமாக எதிரொலிப்பதையும் அடக்கமுடியாமல் கேட்டான். எந்தவித ஒழுங்குக்கும் உட்படாது கரடு முரடாயிருந்த அந்தப் பிரதேசம் இவனுல் ஜீரணிக்க முடியாமல் போனது. ஒவ்வொரு மலைக்கும் இடையிலுள்ள நிலப்பகுதி ஒரே சமயத்தில் குறுகியதாகவும் விசாலமாகவும் மாறி மாறித் தொல்லை கொடுத்தது. தன்னுல் அறிந்து கொள்ள முடியாத மிகப் பெரிய புதரின் முன்னிலையில் இருப்பதை உணர்ந்தான். எப்படியாவது அவ்விடத்தை விட்டுப் போய்விட வேண்டும் என்று ஆசைப்பட்டான். அப்படியே போனுலும் அந்த வெறுமையைத் தான் எப்போதும் தாண்டிச் செல்ல இயலாது என்றும் கண்டு கொண்டான்.

தூக்கம் வராத நேரத்தில் ஏன் இவைகளைப் பற்றி சிந்திக்க வேண்டும் என்றே அவனுக்குப் புரியவில்லை. இரண்டு அனுபவங்களும் ஒன்றுக்கொன்று வித்தியாசமானதாக இருந்தாலும் பின்னதே மிகுந்த பலத்துடன் இவனை ஆக்கிரமிக்கத் தொடங்கியது. ஒவ்வொரு நிமிடமும் இருளின் ஒலிவடிவங்களாய் பெரியவைகளாய் தாண்ட முடியக்கூடாமல் போய்விட்டதை நினைத்தபோது இனம் தெரியாத அந்த பயம் மறுபடியும் கிளம்பியது. தாங்கமுடியாத அளவிற்கு சூன்யத்தின் உள்ளே மீண்டு வரமுடியாமல் சென்றுவிட்டதைப் போன்று உணர்ந்தான். இந்த சூன்யத்தின் முன் மற்றெல்லா விஷயங்களும் சக்தியற்று நின்றுவிட்டிருந்தன. மகிழ்ச்சி தரக்கூடிய எந்தநிகழ்ச்சியையும் இவனுல் நினைவிற்குக் கொண்டுவர முடியவில்லை. அழுவதற்குக்கூட கண்களில் நீர்இன்றி வரண்டுபோனது. தொண்டை அடைத்து கண்களை திறக்க முடியாமல் போய்விடுமோ என்று பயப்பட்டான். காலம் இவனுக்கு ஒரு பொருட்டாகாமல் நகரவே இல்லை.

இப்போது வெறுமையைத் தாண்ட வேண்டிய அவசியத்திற்கு தான் வந்துவிட்டதைப் போன்று இருந்தது. எப்படியும் இந்த வெறுமையை வழிக்குக் கொண்டு வரவேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டான். முதலில் வெறுமையை எங்கிருந்தோ இழுத்துவரும் எண்ண ஓட்டத்தை நிறுத்தினுல் பரவாயில்லைபோல் இருந்தது. எண்ண ஓட்டத்தை நிறுத்த முடியுமா என்றே தெரியவில்லை. இப்போது தானுகவே வந்ததொரு அனுபவம் நினைவிற்கு வந்தது.

அன்று மாலை இவன் மிகுந்த நெருக்கடியான இடத்தில் சாலையை இரண்டு இடங்களில் கடக்க வேண்டியிருந்தது. அதற்கு

முன் இவன் தனது வீட்டில் நன்ருகத் தூங்கிக் கொண்டிருந்தான். தூக்கத்திலிருந்து விழித்தபோது மனது நின்றுவிட்டிருந்தது. அதை இழக்க விரும்பாதவனுய் முகம்கூடக் கழுவிக் கொள்ளாமல் வெளியே கிளம்பி விட்டிருந்தான். அதற்குப் பிறகு அந்த சாலையின் இரண்டு இடங்களையும் தனக்குத்தெரியாமல் தாண்டிவிட்டதைக்கண்டுகொண் டான். தான் ஏதாவதொன்றைப் பற்றிய நினைவில் லயித்துப்போய் பழக்கத்தால் தாண்டவில்லை என்று தெரிந்தது. அவ்வாறென்ருல் மனம் தூக்கத்திலிருந்ததைப் போல் எண்ணமற்றதொன்ருய் அப் போது இருந்திருக்க வேண்டும். அது காலமற்றதாய் எந்தவித எல்லைகளுக்கும் கட்டுப்படாது இருந்திருக்க வேண்டும். அந்த நேரங் களே உண்மையானவை. அப்போது முழுமையான அமைதியைத் தவிர ஒன்றுமேயில்லை. இப்போது அதை நினைவிற்குக் கொண்டு வந்தபோது வெறுமைக்கும் அமைதிக்கும் உள்ள தொலைவு இவனுல் கணிக்க முடியாமல் இருந்தது.

திடீரென்று ஒரு உண்மையைக் கண்டு கொண்டான். எண்ண மில்லாத சமயமே இவனுக்கு இவனைப்பற்றிய பிரக்ஞை இல்லாதது தான். அது ஒன்றுதான் இவன் பாதையைக் கடக்கும்போது ஏற்பட் டிருக்க வேண்டும். தான் என்கிற பிரக்ஞை முழுவதுமாகப் போகும் போது அமைதி நிறைந்து கொள்ளும் என்பது நன்ருகப் புரிந்தது. அதே சமயத்துல் அந்த பிரக்ஞையை அகற்றுவது சாத்தியமா என்றும் தெரியவில்லை. ஒருவேளை தன் உயிரை முடித்துக் கொண் டால் சாத்தியமோ... வேறு வழி தோன்றவில்லை. இருப்பதாகவும் படவில்லை. ஒருவேளை சாவிற்குப் பிறகும் பிரக்ஞை இருக்குமோ. எப்படியும் தெரியும் ஒரே வழியை முயற்சித்துப் பார்ப்பதே மேல் என்று தோன்றியது. எப்படியும் இந்த வெறுமை தன் முன்னிலை யிலோ தான் அதன் முன்னிலையிலோ வரக்கூடாது என்றுதீர்மானமாய் நினைத்துக் கொண்டான். எழுந்து உட்கார்ந்துகொண்டான். தலை வலிக்கிறதா இல்லையா என்றே தெரியவில்லை. உயிரை போக்கிக் கொள்ளும் எண்ணம் வலிவுடன் இவனை உட்கொள்ள ஆரம்பித்தது.

இறந்து போகப் போகிருேம் என்கிற எண்ணமே மனதை லேசாக்கத் தொடங்கியது. கண்களைத் திறந்து திறந்து மூடினுன். எல்லாத் துன்பங்களிலிருந்தும் தான் தாண்டித் தாண்டிச் செல்வதைப் போல் உணர்ந்தான். கண்களை மறுபடியும் மூடியபோது உள்ளே வெளிச்சமாக இருந்தது. திடீரென்று தன் உடம்பின் பிரக்ஞையை இழந்து போனுன். மனம் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவு கண்டது. மேகங்களில்லா வானமாய் அகன்று விரிந்து கொண்டது.

நக்ஷத்திரப் பூக்கள் அங்கொன்றும்இங்கொன்றுமாய் வேகமாய் மலர ஆரம்பித்தன. ஒளிக்கூட்டமாய் ஒளிவெள்ளமாய் உயரத்திற்கு பறக்க ஆரம்பித்தான். எந்தவித கனமும் இவனைத் தடுக்க முடிய வில்லை. மாருக வானிலை குளிர்ந்து இவனை மேலும் ஊக்குவித்தது. முழுமையான நிறைவு இவனை ஆட்கொண்டது.

இவன் எழுந்துகொண்டபோது காலை லேசாகப் புலர ஆம்பித் திருந்தது. இவன் தோட்டத்தில் வந்து நின்று கொண்டான். தினம் முருங்கை மரத்தில் வந்து அமரும் இரண்டு பச்சைக் கிளிகளைக் காண மிகுந்த ஆர்வத்துடன் மேலே பார்க்க ஆரம்பித்தான். ●

# மீண்டும் நீருக்குள்

(கிருஷ்ணன் நம்பிக்கு)

நாதன் முடிமேல்
இருக்கும்
நாகப் பாம்பு,
நாகப் பாம்பு;

புல்வெளியில்
கண்மறைவில்
இழைந்துவரும்
நாகப் பாம்பு,
நாகப் பாம்பு;

உள்ளக் குகையில்
உன்மத்த வெறியில்
வளைய வரும்
நாகப் பாம்பு,
நாகப் பாம்பு;

பித்தனைப் போல்
பிறை சூடிப்
பாம்பணிந்து
ஆடல் பயின்று
பாடல் விழையும்
என்னைக் கண்டு
உன்னரைக் குகையில்
வெறுங் குடலாகச்
சுருண்டு கிடக்கும்
நாகப் பாம்பு,
நாகப் பாம்பு;

படமெடுத்துக்
குடை பிடிக்கும்;
தன் நீள்
உடலை மண்டலமிட்டுப்
பரமன் துயில் புரியப்
பாயலாக விரிக்கும்
நல்ல பாம்பு.
நல்லபாம்பு.

நகுலன்

# மரக்குதிரை

'அன்னம்' வெளியீட்டு நிறுவனத்தின் ஆண்டுக்கு மூன்று புத்தகங்கள் என்ற திட்டத்தில் மூன்ருவதாக வந்திருப்பது 'மரக்குதிரை'; மலேயாளச் சிறுகதைகள்; மொழி பெயர்ப்பு, இளம் பாரதி. இந்திய விடுதலேக்குப் பின்னுல் எழுதிய சிறுகதைகள் என்று ஓர் எல்லேயை நிர்ணயித்துக் கொண்டு எட்டு சிறுகதைகளேத் தொகுத்திருக்கிருர்கள்.

ஒரு தொகுப்பு பலருக்கும் நிறைவு தராது என்று சாதாரணமாகச் சொல்வது உண்டு. ஆனுல் ஒரு மொழியில் என்ன நிகழ்ந்து வருகிறது என்பதற்கு அநேகமாக பிரதிநிதித்துவம் பெறுவது என்பது தான் தொகுப்புகளின் பிரதான இலட்சியம். அந்த இலட்சியத்தை எவ்வளவு தூரம் மரக் குதிரை அடைகிறது என்று பார்க்கையில் கேரளத்திற்கு அப்பால் அறியப்பட்ட பேர்களான டாடாபுரம் சுகுமாரன், லலீதாம்பிகா அந்தர்ஜனம்—சிறு கதைகள் அம்மொழியில் பெறும் இடமென்ன? லலிதாப்ரபா, ஜி. விவேகானந்தன், கே. எல். மோகனவர்மா—சிறுகதைகள் தொகுப்பில் இடம்பெற எவை உதவின என்றெல்லாம் கேட்பது தவிர்க்க முடியாததாகிவிடுகிறது.

'எழில் நிலாத் தட்டேந்திய இரவு நாணி நாணி மூடுபனியாம் ஆபரணமணிந்து மேற்கு அந்தி வானமாம் கோவில் குளத்தில் குளிப்பதற்காக இறங்கும்போது கிழக்கு மலேகளில் கொட்டும் முழக்கும் முழங்கிக்கொண்டிருந்தன. அந்த மங்கள இசையும் ஆரவாரமும் கேட்டுத்தான் ராதிகா கண் விழித்தாள்.'

ஜி. விவேகானந்தத்தின் இந்த அலங்கார நடை கதையைப் பாதித்து ரொம்பவும் செயற்கையாக்கிவிடுகிறது.

மலேயாள மொழியில் சிறுகதைகள் நன்ருக எழுதப்படுகிறது என்று சொல்வதை ஏற்ருல்—மரக்குதிரை தொகுப்பாளர் சிரமம் ஏதுமின்றி கைக்குக் கிடைத்த எட்டு சிறுகதைகளேயும் ஏற்றுக்கொண்டு விட்டார் என்பது சுலபமாகிவிடும். இல்லாவிடில் அம்மொழியில் இளந்தலேமுறை எழுத்து இவையே என உறுதிப்படுத்தினுல்—மலேயாள மொழி சிறுகதையில் சாதிக்க வேண்டியவை இன்னும் நிறைய இருக்கிறது என்றே தோன்றுகிறது.

— சா. கந்தசாமி

---

*மரக்குதிரை (மலேயாளச் சிறுகதைகள்) தமிழாக்கம்: இளம்பாரதி*
*வெளியீடு: அன்னம் 4 புதுத் தெரு சிவகங்கை 623 560*
*விலே: ரூ. 5-00*

---

Published by N. Mahaaganapathy, I-20, Turnbull Road, Nandanam, Madras-600 035. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil Street, Madras 600 004. Editor: N. Krishnamurthy